REGD. NO. M. 1823

விளம்பரம்

நோட்டீஸ் கோர்ட் விளம்பரம் முதலியவைகளுக்கு இஞ்சு ஒன்றுக்கு ரூ. 1-8-0

வியாபார சம்பந்தமானது ரூ. 2-0-0

ஒப்பந்த விளம்பரத்துக்கு மானேஜருக்கெழுதவும்

# குமரன்

சந்தா விபரம்

உள் நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 6-0-0
சிலோன் ரூ. 6 0 0
ஆறு மாதம் ரூ. 3-8-0

பர்மா, மலாயா முதலிய வெளிநாடு ஒரு 1-க்கு ரூ. 8-0-0

வியாழன் தோறும் வெளிவரும் மாதப் பதிப்பும் சேர்ந்தது. PUBLISHED EVERY THURSDAY

ஆரம் 24 | மகளிர் இல்லம், விய மாசி 1௳ (13—2—47) | முத்து 26

புலவர் பாடல்களில் துன்பப்பட்டதாகவும், வறுமையால் வாடி வதங்கியதாகவும் பல நிகழ்ச்சிகள் காணப்படுகின்றன. அதோடுகூட பரிசில் பெற்ற மகிழ்ச்சியும் எழுச்சியும் பொங்கி வெளிவரும் பாடல்களும் பல உள்ளன. ஒரு புலவர் வறுமையால் துன்புற்றதையும் செல்வத்தால் இன்புற்றதையும் பாடியிருப்பதைக் காண்கிறோம். ஆனால் இரட்டைப் புலவர்கள் செல்வம் பெற்று அதனால் இன்புற்றதாக மகிழ்ச்சி கொண்டு பாடிய பாடல்கள் அகப்படவில்லை. இவ்விரு புலவரும் கருட சேவையாக கிராமம் கிராமமாக கால் நடையில் போய்க்கொண்டிருக்கிறார்கள். சிவபெருமானைப் பற்றி ஒரு பாடல் மேலே யிருக்கிற புலவருக்கு உதயமாயிற்று. சிலேடையாகப் பாட்டைத் தொடங்கினர்.

சர்வேசுரனை பரமேஸ்வரன் ஒட்டை உடைசலான ஆயுதங்களை வைத்துக்கொண்டு மிக்க உரமுள்ள திரிபுரத்தை அழித்தது ஒரு அற்புதம். மிக்க வலிமையுடையதென்று பேசப்படும் திரிபுரம் ஒட்டை உடைசலான ஆயுதங்களுக்குத் தாங்காமற்போனது ஒரு அதிசயம். சர்வ வல்லமை உள்ள கடவுளுக்கு திரிபுரத்தை எரிக்க எந்த ஆயுதமாயிருந்தால் என்ன என்ற ஒரு அலட்சியபாவம். இப்படிப்பட்ட உள்ளக் கிளர்ச்சியோடு கேலியாக சிலேடைப் பாட்டொன்றைப் புலவர் தொடங்கினர்.

"நாணென்றால் நஞ்சிருக்கும் நற்சாபம்
கற்சாபம்"

திரிபுரத்தை எரிப்பதற்கு எடுத்த வில்லினுடைய நாண், அதாவது விற்கம்பை இழுத்துக் கட்டுகிற கயிறு வாசுகி என்ற பாம்பாகும். விற்கம்போ மகா மேரு மலை என்பது புராணக்கதை. கல்லை வளைத்து நைந்து போன கயிற்றைக்கட்டி அம்புவிடுவதென்பது ஒரு கேலிக் கூத்துத்தானே. நாணைப்பற்றியும் விற்கம்பைப்பற்றியும் வெகு நயமாக ஒரு அடி கிடைத்தது. அடுத்த அடியைப் புலவர் தொடங்குகிறார். நாண் ஆயிற்று; வில் ஆயிற்று; இனி வேண்டுவது பாணம் தானே. "நாணென்றால் நஞ்சிருக்கும்; நற்சாபம் கற்சாபம்; பாணந்தான்" என்று வந்தபாடல் நின்றுவிட்டது. சிலேடையில் விழவேண்டும், திரிபுர தகனத்தில் பாணமாயிருந்தவர் மகாவிஷ்ணு. அவரை ஒரு மட்டமாகச் சொல்ல வேண்டும். அந்தப் போக்கில் புலவருக்குப் பாட்டு உதயமாக வில்லை, பாணந்தான், பாணந்தான், பாணந்தான் என்று சொல்லிப்பார்த்தார். பாட்டு வரவில்லை, பாட்டின் பாதியை மேற்புலவர் பாடி முடித்தால்த் தானே நடைப்புலவர் எஞ்சிய பாதியை முடிக்க முடியும். இரண்டாவது

சென்ற வாரத் தொடர்ச்சி

## அறிவும் திருவும்

(அஞ்சா நெஞ்சன்)

அடியின் தொடக்கத்திலேயே பாட்டு நின்றல்லவா போய்விட்டது. நல்ல முச்சந்தியில் உள்ள ஒரு சுவரில் பாட்டை எழுதினர்கள்.

"நாணென்றால் நஞ்சிருக்கும்
நற்சாபம் கற்சாபம், பாணந்தான்" என்று

ஃ ஃ ஃ

சில மாதங்களாயின. காளமேகப் புலவருடைய பல்லக்கு அந்தவழியே சென்றது. விசாலமான கண் கொண்ட காளமேகப் புலவர் அதனைப்பார்த்தார். பல்லக்கு சுவரோரம் போயிற்று. அங்கே எழுதப்பட்டிருந்த பாடலில் "மண்தின்ற பாணமே" என்ற சொற்கள் எழுதப் பட்டன. ஆண்டுகள் கடந்தன. திரும்புகாலில் இரட்டைப் புலவர்கள் அங்கே வந்தனர். மேலே உள்ள புலவர் தம்பாடல் வளர்ந்திருப்பதைக் கண்டார். ஆஹா! என்ன வியப்பு!! எவ்வளவு மகிழ்ச்சி!!! மகிழ்ச்சிக் கடலில் குளித்த புலவர் பெருமான்







"நாணென்றால்நஞ்சிருக்கும் நற்சாபம் கற்சாபம், பாணந்தான் மண்தின்ற பாணமே" என்று படித்தார். படித்தது தான் தாமதம்.

—நாணுமே
சேரருர் மேவும் சிவனே நீ எப்படியோ
நேரார் புரமெரித்த நேர்.

என்று புலவரைத் தூக்கின்ற புலவர் பாட்டை முடித்துவிட்டார். மூன்று புலவர் கூடி இந்தப் பாடலை முடித்தார்கள். பெரியகாரியம். இப்படிப் பட்ட ஒரு தமிழ்ப் பாட்டு ஒரு கஷ்டமும் படாத நமக்குக் கிடைத்திருக்கிறது. பாட்டை ஒருதரம் படிக்கலாம்.

"நாணென்றால் நஞ்சிருக்கும் நற்சாபம்
கற்சாபம்
பாணந்தான் மண்டின்ற பாணமே—
நாணுமே
சேரருர் மேவும் சிவனே நீ எப்படியோ
நேரார் புரமெரித்த நேர்."

ஃ ஃ ஃ

தமிழன்னையின் திருவருள் இந்தப் பாடலைப் பொறுத்தமட்டில் இரட்டையருக்குக் கிட்டவில்லைதான். அன்னையின் பூரண திருவருள் காளமேகப் புலவரின் நாவிற்குக் கிட்டியது. பாடலை நல்கியது. "பாணந்தான் மண்தின்ற பாணமே" முப்புரம் பொடிசெய்வதற்கு அம்பாக இருந்தவர் திருமால். அவர் மண்ணை உண்டாரல்லவா! அம்பு நிலத்திற் புதைபட்டு மக்கி இற்றுப்போன இரும்புத் துண்டு என்ற பொருளும் கிடைக்கிறதல்லவா? இந்த அருஞ்சொற்றொடர் இரட்டைப் புலவர்கள் உள்ளத்தை கிழுங்கியது. காளமேகப் புலவரைக் காண விரைந்தனர், நடந்தனர்; புலவர் ஊருக்குச் சென்றனர். புலவர் வீட்டில் இல்லை. கேட்டனர். இறந்து போயினர்; சற்று[illegible] உடலும் எடுத்துச் சொல்[illegible]பட்டது என்று சொல்லினர். புலவர்கள் சுடுகாட்டிற்குச்சென்றனர். காளமேகப் புலவரின் உடல் நெருப்புப் பற்றி எரிந்து கொண்டிருக்கிறது. புலவர்கள் கண்டனர். ஓரே சோகக் கடலில் தவித்தனர். "விண்கொண்ட செந்தழலாய் வேகுதே! ஐயையோ! மண் தின்ற பாணம் என்றவாய்" வானம் வரைக்கும் அனாவி [illegible] எரிகிறதே. தமிழ்ப் புலவன் [illegible] பார்க்கவில்லையே. பேரனும் போகட்டும், மண்தின்ற பாணம் என்ற வாயல்லவா எரிகிறது. தமிழ் நாட்டில் வாய்க்கென்ன குறைச்சல். ஆளுக்கொரு வாய் இருக்கத்தான் செய்கிறது. பெரும் புலவனின் வாய்—செந்தமிழ் கொழிக்கும் வாய்—மண் தின்ற பாணமென்ற சொற்றொடரைச் சொன்னவாய் வேகிறதே! "விண்கொண்ட செந்தழலாய் வேகிறதே! ஐயையோ!" என்ற புலவரின் உள்ளத் துடிப்பு சொல்லில் அடிக்கிறது. அல்லவா?

வடக்கே இமயமலை முதல் தெற்கே குமரி வரையும், உள்ள பெருநிலப் பரப்பும், இன்னும் தெற்கே அடுத்துள்ள ஈழமும், இவற்றுடன் முக்காலமும் தொடர்புடைய பர்மா மலாயா ஜாவா சுமத்திரா முதலிய தென்கிழக்காசிய நாடுகளும், தென்னாப்பிரிக்காவும் அதனை யடுத்துக்கிழக்குக் கரையில் இந்து சமுத்திரத்தில் உள்ள மடகாஸ்கர் தீவும் தமிழ் வழங்கும் இடங்களாகும்.

வடவேங்கடந் தென்குமரி எனத் தமிழ் வழங்கும் நிலத்துக்கு எல்லை கூறிப் போந்தார் பனம்பாரனர். சங்க காலத்தில் தோன்றிய தமிழிலக்கணமாகிய தொல்காப்பியம் என்னும் சிறந்த நூல், வடவேங்கடம் தென்குமரி என்ற எல்லைகளுக்கிடைப்பட்ட நிலத்தில் வாழும் மக்களின் வாழ்க்கை முறையைக் கூறுவதாகும். அக்காரணத்தால் நூலாசிரியர் காலத்திருந்த பனம்பாரனர் வேற்று மொழியின்றித் தமிழ் மாத்திரம் வழங்கிய நிலப்பரப்புக்கு எல்லை கூறினர். மொழியைக் கொண்டே நாட்டை வகுப்பது முறையாகும். குமரி முதல் இமயம் வரை ஒருமொழி வைத் துலகாண்ட இமயவரம்பன் காலத்தில் தமிழ் அரசியல் மொழியாக இருந்தது அதற்கு முன்னர்ப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் தென்கிழக்காசிய நாடுகளும், தென்னாப்பிரிக்க மடகாஸ்கர் தீவு முதலியனவும் தமிழ் வழங்கும் இடங்களாக இருந்தன என்றே சொல்லலாம். நாளடைவில் அரசியலை வேற்றரசர் கைப்பற்றிச் சிறிது சிறிதாக தத்தம் மொழியைப் பரப்பவே தமிழரசும் குன்றத் தொடங்கியது.

வட வேங்கடந் தென்குமரிக் கிடையில் பல அரசும் பலமொழிகளும்வழங்குகின்றன என்பதைக் கண்ணாரக் காண்கின்றேம். தமிழ் பேசும் மக்களின் தொகை குறைந்து விட்டது. 16-ம் நூற்றுண்டில் வர்த்தக வாயிலாக வந்து புகுந்த பிறமொழி தம் தாய் மொழியை மறக்கச் செய்துவிட்டது. எனவே, தமிழ் குன்றுவதற்குத் தடையென்னே? எந்த மொழி அரசியல் மொழியாய் இருக்கிறதோ அந்த மொழி வளர்ச்சியடையச் சொந்த மொழி வளர்ச்சி அடையாது குன்றும் என்பதற்கு வேறு சான்று வேண்டாம். பண்டைக் காலத்தில் பெருநிலப் பரப்பாய் இருந்த தமிழ் நாடு குறைந்து, இமயவரம்பன் காலத்தில் குமரி முதல் இமயம் வரை இருந்தது. பனம்பாரனர் கூறிய தனித் தமிழ் வழங்கும் வடவேங்கடந் தென் குமரிக்கு இடைப்பட்ட நிலப்பகுதியும் குன்றித் தற்போது சென்னை மாகாணம் வரையில் நிற்கின்றது. இவ் வெல்லைக் கிடையிலும் வேற்று மொழிகள் பல வழங்குகின்றன.

இவ்வாறு நாளடைவில் தமிழ்எல்லை குறைந்து வந்திருக்கின்றது. எனவே மிக்க பண்டைக் காலத்தில் கிழக்கிந்தியத் தீவுகளும் அதை அடுத்த தென் கிழக்காசிய நாடுகளும், தென்னாப்பிரிக்க மடகாஸ்கரும் தமிழ் வழங்கு மிடங்களாக ஏன் இருந்திருக்கக் கூடாது. இருந்திருக்கலாம் என்று நம்ப இடம் உண்டாகின்றது. பண்டையத் தமிழ்நிலப் பரப்பிடங்களிலேயே இன்றும் தமிழ் பேசும் மக்கள் குடியேறி இருக்கின்றார்கள். அவ்விடங்கள் தமிழ் வாழ்க்கைக் கேற்ற இடங்களாய் அமைந்துள்ளன. ஆகவே மேற்கூறிய இடங்கள் ஒன்று சேர்ந்து முன்னொரு காலத்தில் தமிழ் வழங்கும் பெருநிலப்பரப்பாகஇருந்திருக்கலாம். இதை உற்று நோக்கும்போது அட்டமித் திங்களையாயினும் அரைவட்டத்தையாயினும் நமக்குப் புலப்படுத்துகின்றது.

போரசாட்சி செய்த தமிழ் இன்று அடங்கி ஒடுங்கி நடுங்குகின்றது.

# தமிழா! தமிழா!!

(துரை)

★

தாயை உதறித் தள்ளிவிட்டுப் பிற தாயைப் போற்றி அழகுபடுத்தும் தமிழ் தெரியாத, வேற்று மொழிக் கடிமைப்பட்ட இளைஞர் செயலைச் சிறிது ஆராய்வோம்.

தமிழா? அதைக் கற்பதனுற் பயனில்லை. அறிவு வளர்ச்சிக்கிடமில்லை. பல நூல்கள் இல்லை. அறியாமை அகலாது. கிணற்றுத் தவளைக்கு நாட்டு வளப்பமேன் என்றும், அகழியிற் கிடந்த முதலைக்கு அதுவே வைகுண்டம் என்றும் தம்மைப் பெரிதாக நினைத்துக் கொண்டிருக்க வேண்டியதே தவிர, உலகைப்பற்றி வேறொன்றும் அறிய முடியாது. தமிழைக் கற்றிருந்தால் இருபதாம் நூற்றுண்டில் கலைப் புரட்சியைக் காணமுடியுமா? பல்லாயிரம் மைல்களுக் கப்பாலுள்ள நிகழ்ச்சியை நடந்துகொண்டிருக்கும்போதே கேட்க முடியுமா? உடலுள்ளுறுப்பைப் படம் பிடித்துக் காட்டும் கருவியைக் காணமுடியுமா? ஆயிரம் மைல் தூரத்தை அரை மைல் போல் ஆக்கும் ஆளில்லா விமானத்தைக் காணமுடியுமா? அடைந்த இடத்தைப் பாழாக்கும் அணுக் குண்டைக் காணமுடியுமா?

தமிழா, அது கற்கவராது. கடுமை வாய்ந்தது. அதைக் கற்கும் நேரத்தில் பிரெஞ்சு, லத்தீன் முதலிய மொழிகளைக் கற்றுத் தேர்ச்சி பெறலாம். மேன்மேலும் விரிந்த ஆராய்ச்சியைச் செய்யலாம். தமிழைப் படித்துப்படித்துத் தலைமுழுக வேண்டியதே தவிர வேறொரு பயனுமில்லை. தமிழாந் தமிழ். இனிமை யென்று சிலர் சொல்லுகிறார்கள். ஆனால், கற்றால் இனிமையைக் காணமுடியவில்லை. அதற்கு மாருக வெறுப்பைத்தான் காணமுடியும்.

ஏதோ உலகியலற நீதியைப் புகட்டும் திருக்குறள் என்று ஒன்று இருக்கின்றதாம். அந்நூல் மிகவும் சிறந்தது. எம்மொழியிலும் கிடையாத பண்பாடு, அந்நூலில் அமைந்திருக்கின்றது. அதைப் பல மொழிகளிலும் மொழிபெயர்த் திருக்கின்றார்கள் என்று இவ்வாறான பலவற்றைச் சிலர் சொல்லுகின்றார்கள். ஒரு நூல் இருந்து உலக வளர்ச்சிக்குப் போதுமா? திருக்குறளைக் கட்டிக்கொண்டு அழவேண்டியதே யன்றி விஞ்ஞான உலகில் இடம்பெற முடியுமா?

தமிழா, அம்மொழியைப் படித்தவர் படும்நிலை என்னுற் சொல்லுந் தரத்திலமைந்த தன்று. எனினும் சில கூறாது விடவும் இயலவில்லை. தொழிலுக்கு மனுச் செய்தால், தமிழா! நீ யார்? உனக்கு என்ன தெரியும்? தமிழா, அப்படியானால் வெளியிற் செல். இங்குத் தொழில் இல்லை. நீதிமன்றத்துக்குச் சென்றால், தமிழா! அடக்கமாக நில் எனக் காவற்காரன் உரத்த தொனியிற் கர்ச்சித்துப் பயமுறுத்துகின்றான். பிரயாணத்தில் தமிழா! தூர நில். இங்கே நிற்காதே என்ற அச்சுறுத்தல் வருகின்றது. தமிழா! உனக்குத் தற்கால நாகரிகத்தாரோடு பழகத் தெரியாது. தமிழா! இப்பொழுது உன் வேலை செய்ய முடியாது. அவசியமாயின் நான் அழைக்கும் வரையில் நிற்பாயாக. தமிழா! நீ ஒரு மனிதனு? மந்தைக் கூட்டத்தைச் சேர்ந்தவன். மேல் நாட்டைப் பார். எங்களுடைய தூய தொடுதோல், உடலுறை, தலையணி, தூய்மை, ஒழுங்கு முறை, சுகாதார வாழ்க்கை இவற்றைப் பார். இவற்றுக்கு நீ எத்துணையளவு. தாழ்ந்த தமிழா! தலையா தூக்குகின்றாய். பழைய உணர்ச்சி ஏற்பட்டு விட்டதா? தமிழரசு நடத்தலாமென்று நினைவு தோன்றிவிட்டது போலும். ஏ தமிழா! ஏன் உறங்குகின்றாய், என்னை விழித்துப்பார். பகற் கனவு காணுதே. தமிழா! காண்பதெல்லாம் நனவாக வாராது. தமிழா! தமிழா!! தமிழா !!!







'சமயம்' என்பது மக்களினத்தின் சிறப்பியல்புகளில் ஒன்று. சமயக் கோட்பாடில்லாத மக்களினம்—என்றும்—எங்கும்—நாகரிகமுள்ள கூட்டமாகக் கருதப்பட்டதும், படுவதும் இல்லை. கொள்கையில் வேறுபாடு—பழக்க வழக்கங்களில் மாறுபாடு—இவை முரண்பட்டு இருந்தபோதிலும், 'தெய்வக்கொள்கையிலே' எல்லாச் சமயங்களும் ஒருமித்த நம்பிக்கை கொண்டிருக்கின்றன. இம்மை—மறுமை—எண்ணம்—வீடு—நாகம்பற்றிய சிந்தனை, பாவ புண்ணியக் கருத்துக்கள் இவையாவும் சமயவாழ்க்கைக்கு 'அடிப்படை அங்கங்கள்'. எனினும், கடவுள் வழிபாட்டினை அதன் 'உயிர் நிலை' என்னவாகும்! 'கடவுள் இல்லை' என்பாரும், அதன் நிலையிலே வேறு ஒரு 'இயற்கைச் சக்தி'யை ஒப்புக் கொண்டுதான் பேசுகிறார்கள்! இக் 'கடவுட் கொள்கை' மக்களினத்திற்கு என்று தொட்டு உண்டாகி வந்திருக்கிறது என்று எளிதில் சொல்லி விடுவதற்கில்லை. உயிர்போன்ற இவ்வுணர்ச்சி, உடம்பெடுத்த காலந் தொட்டே, மக்கட் கூட்டத்திற்கு 'அறிவநுபவ' வாயிலாகவே உண்டாகி வளர்ந்து வந்திருத்தல் வேண்டும் என்றே நுனித்துணர முடியும்.

'சமயம்' எந்த அளவிற்கு மக்கள் வாழ்விலே நெருங்கித் தொடர்பு கொண்டிருக்கிறதோ அந்த அளவிற்குக் கடவுள் வழிபாடும்—நெருங்கித் தொடர்பு கொண்டு விடுகிறது, 'சமயம்' கொள்கை அளவிலே இருந்து பின்பற்றப் பட்டுவந்த சங்கக்காலத்தில் கடவுளியலும் கொள்கை அளவிலே போற்றப்பட்டுவந்தது அறிய வருகிறது. சமயநிலை, 'ஆசார அநுஷ்டான' முறையிலே வழிவழியுரிமையாய்ப் பேணப்பட்டுச் சிறந்த பிற்காலங்களிலே—கடவுள் இயலும் நம்பிக்கைக்கு உரிய பொருளாய் மாறிப் பலவேறு பெயர் உருவங்களுடன் கூடிநின்று, பல்கிப் பெருகிவிட்டது, எனவே 'பழந்தமிழர்' கடவுள் வழிபாட்டுமுறை பற்றித் தெரிய விரும்பும் போது நாம் மறவாது மேற்கொள்ள வேண்டுவது ஒன்றுஉண்டு! சங்கநூல்கள் யாவும் வடவர் கலப்பற்ற தனித் தமிழர் நாகரீகம் தெரிவிப்பனவே என்று கருதிவிடமுடியாது. அவற்றிற்கு எல்லாம் மூன்றும் நூற்றுண்டிலே இருந்த கருத்துக்கள் என்ற அளவிலே பழமைகாட்டி வேண்டுமானல் ஏற்கலாம். அவைகளிலும் சில பிற்கால நூல்களில் வடவர் பண்பாடும் நாகரிகமும் பழக்கவழக்கங்களும் கலந்துதான் இருக்கின்றன. இக்கலப்பின் விளைவைத் தொல்காப்பியத்திலேயே காணமுடிகிறது. எவ்வளவுதான் கலந்தாலும் பிறிதொடு கலவாத தூயதமிழ்ப் பண்பாட்டையும் காணமல் மயங்கிவிட வேண்டிய நிலைமை நமக்கு இல்லை. அதுதான் சங்கக்காலத் தமிழின் தனிச் சிறப்பெப்பேன் கலப்பினை நன்றாகக் கண்டறிந்து, என்றைக்கும் நீக்கி எறிந்து—தனிமை பேணிப் போற்றிவிடும் வகையிலேதான் அவ்விலக்கியங்கள் எல்லாத் துறையிலும் நமக்கு உதவுகின்றன. என்றைக்கு வேண்டுமானாலும் தமிழிலே வந்து வழங்கிய பிற சொற்களையும் வட சொற்களையும் களைந்தொதுக்கி, நல்லதமிழ்ச் சொல் அறிந்து போற்றும் முறையிலேதான் மொழிமுதல் வரும் எழுத்து—இடையில் வரும் எழுத்து கடையில் வரும் எழுத்து. என்றெல்லாம் வகுத்து நம் முன்னையோர் நமக்கு இலக்கணம் தந்துள்ளனர்?

ஒவ்வொரு இனத்தாருக்கும்; சில சில மூலப்பண்பாடு—சிறப்பு முறையிலே அமைந்திருக்கிறது. அப்பண்பாட்டினடிப்படையிலே நின்று பார்க்கும்போது பழந் தமிழர்கள் இயற்கையோடு இயைந்து வளம்பட வாழ்ந்த பெருமை உடையவர்கள் என்று

சங்கத் தமிழ்.

# கடவுள் வழிபாடு

[பண்டிட் T. ராமானுஜம்.வித்வான்]

அறியமுடியும். இயற்கையை எதிர்த்துப் போராடிப் போராடி உரிமை வேட்கையுடையர்களாய் வாழ்ந்து வந்த 'மேனாட்டாரோடும்,' இம்மை இகழ்ந்து மறுமை பேணிய வடவரோடும் ஒப்புடையவர்கள் அல்லர்; இயற்கையின் போக்கறிந்து, அதற்கு இயையத் தமதுவாழ்க்கையைப் பண்படுத்தி அதன் உதவிகொண்டு வாழ்ந்து சிறந்த மேதகவுடைய பழமையுடைமையினாலேதான் தமிழர் வாழ்க்கைத்துறை ஒவ்வொன்றிலும் உரிமை வேட்கையால் போராட்டம் எழுவதற்குப் பதிலாக, கடமையுணர்ச்சியால் தன்னல மறுப்பும் தியாகச் செயலுமே விரிட்டு வெளிப்படக் காண்கிறோம். இந்த அளவு முன்னுரையாகத் தெரிந்து, இனிப் பழம் தமிழர் கடவுள் வழிபாட்டுநிலை பற்றிச் சிறிது கண்டு உணருவோம்!

இயற்கை வழி இணைந்து வாழ்ந்த தமிழர்கள் இயற்கையைக் 'கூர்ந்து நோக்கிப் பழகியவர்கள்' என்பதனை நன்கு தெரியத் தடையில்லை. இயற்கையிலே நிலம், நீர், தீ, காற்று, விண் முதலிய ஐம்பூதச் சேர்க்கைக் கலப்பினை உணர்ந்தார்கள். பின், உலகிலே ஒன்றிேடு ஒன்று மாறுபட்ட பல வேறு இயல்புடைய பொருள்கள் சேர்ந்திருப்பதனையும் உணர நேர்ந்தது. மேலும், செய்பவன் இன்றி எச்செயலும் நிகழுவதில்லை என்ற உண்மையும் அவர்களால் உணரப்படாமல் இருக்கமுடியாது. உயிருள்ள பொருள்கள்தாம் இயங்கும். உயிரில்லாத பொருள்களை இயங்குமாறு செய்வதற்கு மற்ருெரு உயிர்ப்பொருள் தேவை உண்டு—என்ற உணர்வும் அவைகளை அடுத்து அவர்கட்கு உண்டாகியிருக்கவே செய்யும். இப்படி எல்லாம் உணர்வு நிலை வந்தபின், காணப்பட்டது கொண்டு, காணப்படாததை அநுமானித்து ஊகிக்குமாறு செய்வது அறிவின் இயல்பு. அம் முறையிலே, உலகத்தை உண்டாக்கி, எப்பொருளையும் இயக்கி, அறிவெல்லையைக் கடந்து நின்று பற்றுக் கோடற்றதாய் உள்ள ஒரு மேலான பொருளினது இருப்பினை உணரவேண்டி வந்தார்கள். இந் நிலைக்கு வருவது, அறிவின் துணையால் வதுப் பெறும் கொள்கையாகுமே தவிர—நம்பிக்கை முறையால் நம்பித் தீரவேண்டிய மூட பக்தி முறை, அல்ல. இந்த அடிப்படை வேறுபாடு நாம் தெரிய வேண்டும். இந்த அளவிற்கு இயற்கையோடு வாழ்ந்து 'கடவுள் உண்மை தெரிந்த தமிழர்கள் அதற்குப் பெயரிட்டுப் போற்றிய அழகு பெரிதும் சிந்திக்கத்தக்கது! கடவுளியலைக் கந்தழி என்று தொல்காப்பியம் சுட்டுகிறது. 'கந்து' என்பது பற்றுக்கோடு. அது அழிந்து ஒழிந்த—யாதொரு பற்றுக்கோடும் சுற்றுச் சார்பும் இன்றி அருவமாய் நின்ற நிலையே 'கந்தழி' என்ற பெயரால் சுட்டிய பழந் தமிழர் கடவுள் இயலாகும். 'கடவுள்' என்ற பெயரினையே பார்த்தாலும் அவ்வுண்மைகள் தெரியவரும்! அறிவைக் கடந்தது 'கடவுள்' என்றுமட்டும் இல்லை, எப்பொருளையும் கடவிச் செலுத்துவது எதுவோ அது 'கடவுள்'. இயக்கும் காரணங் கொண்டு அம் மூலப் பொருள் 'இயவுள்' என்னப்பட்டது.

வள்ளுவர் குறள் கீழ்க் கணக்குள் ஒன்றாகத் தொகுக்கப்பட்டது கடைச் சங்க காலத்திலே! ஆனல் இயற்றப்பட்ட காலம், அதற்கும் முன்னைய மிகப் பழங்காலம் ஆகும் என்பது உயர் திரு. சோமசுந்தர பாரதியார் அவர்கள் கருத்து. பிற்காலச் 'சங்க இலக்கியங்களிலே' காணும் கலந்த கருத்துக்களைப் போலில்லாமல் எல்லா வகையிலும் தமிழர் தனிமை தெரிவிக்கும் நோக்குடைய அதன் இயல்பினை பார்க்கும் போது, அதன் பழமையை மிகமுற்படத்தள்ளித்தான்நாமும்கருத வேண்டிவருகிறது. அதிலே, கடவுள் வாழ்த்தியலில் வள்ளுவர் தெரிவிக்கும் கடவுள் இயலை நோக்கும் போது 'பழந்தமிழர் கடவுட் கொள்கையின்' பல சீரிய முடிவுகளைக் கண்டு நாம் போற்றவேண்டியவர்கள் ஆகிறோம்! 'கடவுள் உலகின் தலைவன், படிப்பின் பயன் அவன் குணங்களை அடைவதே ஆகும். உயிர்களின் உள்ளங்களிலே நினைத்த நினைத்த வடிவங்களோடு கலந்துறைபவன் அவன். பற்றில்லாமல் தொழில் புரிவது அவன் இயல்பு. 'நல்வினை, தீவினை' அவனைப் பற்ரு. புலன்களின் தீமையும், அவாவின் இயற்கையும் அவனை அணுகுவதில்லை. தானே தனக்குவமை ஆனவன். அவனுக்குப் பிறப்பிறப்பில்லை. அருளும், அறமுமே உருவாக உடையவன் கடவுள்'—என்று இன்னோன்ன இயல்புகளையே வள்ளுவனுர் சுட்டிச் செல்லுகிறார்.

இப்படி அவர் சொல்வது கொண்டு நாம் தெளியவேண்டிய முடிவுகள் என்ன? இயற்கை வாழ்விலே திளைத்த நம் முன்னையோர், அவ்வியற்கையின் உள்ளே நுழைந்து கண்டார்கள். அங்கெல்லாம் பிறழாத ஒரு ஒருமைப்பாட்டையும், அவைகளில் எல்லாம் மறைந்து கிடக்கும் ஓர் உயிர்ப் பொருளின் இருப்பையும் கண்டு போற்றினர். அங்ஙனம் கண்ட பேருயிர்ப் பொருளையே 'கடவுள்' என்று கண்டு பேணி மனத்தால் நினைத்தும், வாயால் வாழ்த்தியும், மெய்யால் வணங்கியும் வழிபட்டு வந்தனர். இங்ஙனம் பழந் தமிழர் கடவுள் நிலை பேணிய அழகின் திறத்தினை ஆசிரியர் மறைமலை அடிகள் தம் முல்லைப் பாட்டாராய்ச்சியுரையில் விளக்கிக் காட்டியுள்ளார். நக்கீரனர் ஆற்றுப் படையில் கடவுளாகக் கண்டு போற்றிய 'முருகு' இவ்வியற்கையில் விளைந்த அழகே ஆகும். 'கை புனைந்தியற்ருக் கவின் பெறு வனப்பிலே' கடவுள் இருப்புணர்ந்தவர் நக்கீரனர்.

கல் தோன்றி மண் தோன்ருத காலம் மிகப் பழமையது. அப்பழங் காலத்திலே மலையிடம் 'வாளோடு முன்தோன்றி மூத்த குடிகள்' தமிழர்கள் என்று ஒருபாடல் சொல்லுகிறது. காடும், மலையுமே ஆதிகாலத் தமிழ்மக்கள் வாழ்ந்த இடம். குறிஞ்சி நில மக்கள், மலைப் பக்கத்தில் தோன்றிய, 'சிவந்த இளைய' தோற்றத்தைக் கண்டு மகிழ்ந்து கடவுளைச் 'சேயோன்' என்ற பெயரால் வழங்கினர். காட்டிடம் குடிகொண்ட 'முல்லை மாக்கள்' அங்குக் கண்ட 'பசுமையான அழகிய வடிவத்தையே' 'மாயோன்' என்ற கடவுளாகக் கண்டு வணங்கினர். 'மாயோன்மேய காடு உறை உலகம்' சேயோன் மேய மைவரையுலகம் என்ற தொல்காப்பியப் பகுதியால் இவ்வுண்மை தெரியலாம். எனவே திருமால் வழிபாடும் சிவபெருமான் வழிபாடும் நம்மக்கட்கு ஆதிப் பழங்காலத்திலேயே ஏற்படலாயிற்று. திருமாலை 'அழகன்' என்றும், சிவனைச் 'சொக்கன்' என்றும் சொல்லும் பிற்கால வழக்கிலும் 'இயற்கையே கடவுள்' என்றமைந்த மூலக் கொள்கை உருப்பெற்றிருத்தல் காணத்தகும்!

பின் உலகிலே காணப்படும் ஆண் பெண் இயற்கைகளை நுனித்துணர்ந்து 'உயிர்கட்கு முழுமையுமே இப்பாகுபாட்டு நிலை உரியது என்று கண்டார்கள். உயிர்க்குயிராய் விளங்கும் 'கடவுள் இயலிலும்' இவ்விரு பண்புகளின் இயல் வாய்ந்தே விளங்க வேண்டும் என்று துணிந்து கொண்டார்கள். ஆகையினாலேயே, பெண்ணை ஒரு பாற் கொண்டவனாகச் சிவ வடிவத்தையும் திரு விளங்கி அமைந்த மார்பினனாகத் திருமாலையும் மிகப் பழங்கால முதலே நம் முன்னையோர் பேணிவந்தனர். "நீலமேனி வாலிழை பாகத்தொருவன் இருதாள் நிழற்கீழ் மூவகையுலகும் முகிழ்த்தன முறையே" என்பது ஐங்குறுநூற கடவுள் வாழ்த்து. காலம் செல்லச் செல்ல இக்கடவுளர்கட்கு குறிகள் அடையாளம் கோயில்கள் முதலியன எல்லாம் படிப்படியாக நமது பண்டைய தமிழர்களிடம் இயற்கையோடு இயைந்த முறையிலேயே பண்பட்டு வளர்ந்து உருவாகி வந்தன மிக நல்ல முறையிலே!

மறு உலகத்தைப் பற்றியும் இப்படியே இயற்கைக்கு உகந்த முறையிலே கருதி வந்தவர்கள் தமிழர்கள்.

(மே பக்கம் பார்க்க)



One side page dark

குமரன்

மகளிர் இல்லம்

வியவூ மாசிமீ 1உ

## வகுப்புக் கலவரங்கள்

நமது நாடு அடிமைப் பட்டதற்குக் காரணம் வகுப்புக்களின் பிரிவினைதானென்று துணிந்து கூறலாம். மத சம்பந்தமான பிளவுகள், ஜாதிப் பிரிவுகள், சாதாரணமான கொள்கை வேறுபாடுகள் ஆகியவற்றால் பிரிந்து பிரிந்து எண்ணற்ற குழுக்கள் ஏற்பட்டுவிட்டன. கல் பிளந்தாற் போல மறுபடியும் ஒன்றுகூட முடியாமல் தனித் தனிக் கூட்டமாக நின்று நாட்டின் நலனை யழித்துவிட்டன. சமூக ஒற்றுமைக்கும், சமய ஒற்றுமைக்கும் எவ்வளவோ பெரியவர்கள் பல நூற்றுண்டுகளாக முயன்று வந்திருக்கின்றனர். சமரசப் படுத்தத் தோன்றிய இயக்கங்களெல்லாம் தான்தான் ஒவ்வொரு பிரிவாகி வளர்ந்தனவேயன்றி சமரசப்படுத்தின பாடில்லை. இப்படி வளர்ந்த பிரிவினை உரம் பெற்றுவிட்டது. அதுமட்டுமல்ல. பிரிப்பதும் கட்சி சேர்ப்பதும் தனித்தனிக் கூட்டமாக்கித் தலைமை வகிப்பதும் ஒரு கலையாகி வளர்ந்தேறியிருக்கிறது.

பிளவுகள் அடங்கி ஒற்றுமைப்பட்டால்தான் நாடு நல்வாழ்வடைய முடியும். இந்த உண்மை மட்டும் கண்டுபிடிக்கப்பட்டு வெகு நாளாகிவிட்டது. கைவரச் செய்த முயற்சிகள் வெற்றியடையவில்லை. எனினும் காங்கிரஸ் செய்த முயர்சியால் தேசியப் பொது வாழ்வில் பொது ஜன ஐக்கியம் துளிர்த்து வளர்ந்துவிட்டதென்னலாம். மகாத்மாவின் அறிவும் உழைப்பும் சக்தியும் நாட்டை வெகு தூரம் பண்படுத்தி விட்டன. இந்நாட்டில் உள்ள ஜாதிக் கொடுமை மிகக் கொடியது; பிரிவினையையே நோக்கமாகக் கொண்டது; அணுவளவும் உண்மையற்றது. இதனை வெட்டிச் சாய்க்கச் செய்த முயற்சிகள் இடைமறிக்கப்பட்டு வந்ததால் முழுப் பலனைத் தரமுடியவில்லை. இதன் உயிர் நாடி தீண்டாமை ஏற்பாடு. அதை உடைக்க எத்தனையோ மதாச்சாரியர்கள், சமூகச் சீர்திருத்தநெறியாளர்கள் முயன்றனர். வெற்றியில்லை. மகாத்மாகாந்தியடிகளின் முயற்சி வெற்றி கண்டுவிட்டது. தென்னாட்டில்தான் கோயில்கள் அதிகம். கோயிலில் தீண்டாதார் நுழையும் உரிமை பெற்றனர். பெரிய வெற்றி. இனி தீண்டாதவர்களைத் தூண்டி ஒற்றுமைக்கு ஊறுசெய்வது எளிதன்று. அவர்கட்கு வழங்கவேண்டிய உரிமைகள் ஆயிரம் பாக்கியிருக்கின்றன. ஆனாலும் ஒரு முக்கியமான சிறை வாயில் திறக்கப்பட்டது.

அடுத்து முஸ்லிம் பிரச்னை. இதில் மகாத்மா ஈடுபட்டிருக்கிறார். வெற்றி கண்டால் இந்திய நாடு உலகில் ஒரு உன்னதமான நிலையை அடைவது திண்ணம். இதை அடிப்படையாக வைத்துத்தான் அன்னியர் ஆட்சிக் கட்டிடம் கட்டப்பட்டிருக்கிறது. இந்தப் பிரிவின் அடிப்படை கலங்கினால் மேற்படி கட்டிடம் மடமடவென்று சாயும். அன்றுதான் உண்மையான சுதந்திரம் உண்டு. இம்முயற்சிக்கு எதிர்ப்பு இருக்கத்தான் செய்யும். என்றாலும் உண்மை தோல்வியடைகிறதில்லை. ஆனால் அதன் வேகம் குறைக்கப்படுகிறது. சோதனை ஏற்படுகிறது. முடிவில் வெற்றிதான். மகாத்மாவின் இந்த முயற்சி முழுப்பலனை அளிக்க வேண்டும். ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஒரே சமூகத்தினரென்று கருதவேண்டும். இரண்டென்று கருத இடமிருக்கிறவரை நாட்டுக்கு உரிமை கிட்டாது; கிடையாது. ஒருவரை விட்டு ஒருவர் நன்மையடைவதில்லையென்பதை இரு கூட்டமும் உணர வேண்டும். பாகிஸ்தான் என்பது வெறும் கனவு; அல்லது பித்தலாட்டம்; தவறினால் ஏமாற்றம். என்றும் பொய் மெய்யாகாது. ஒரே இந்தியாவில் இரண்டு 'ஸ்தான்' வராது. வந்தாலும் செல்லாது. இந்தச் சில்லறை விவகாரங்களை விட்டு விரைவில் ஒற்றுமைப்பட யாவரும் முயல வேண்டும். நல்ல சந்தர்ப்பம் கிடைத்திருப்பதை நழுவவிடக் கூடாதன்றோ?

## காரைக்குடி

### கவர்னர் விஜயம்

சென்னை கவர்னர் பிப்ரவரி 21-உ காலை 7-30-க்குக் காரைக்குடிக்கு விஜயம் செய்வார். பிறகு திருப்பத்தூருக்குச் செல்வார். மாலையில் மீனாட்சி பெண்பாடசாலையில் ஒரு டீபார்ட்டி நடக்கும். இரவு செட்டிநாடு பாலஸில் டின்னர் நடைபெறுமென்று தெரிகிறது.

ஃ ஃ ஃ

### கோப்புடையம்மன் கோயில் திறப்பு

இக்கோயிலின் ரிசிவர் பொதுஜன அபிப்பிராயத்தைத் தெரிவதற்காக புதுச் சந்தைப்பேட்டையில் 9-2-47 மாலை 4 மணிக்கு ஒரு கூட்டம் கூட்டினர். 'செட்டிநாடு' ஆசிரியர் திரு ஏ. எஸ். சர்மா தலைமை வகித்தார். திறந்துவிடுவது சம்பந்தமாகச் செய்யப்பட்டிருக்கிற காரியங்களைப் பற்றி ரிசிவர் தெரிவித்தார். திறந்துவிட வேண்டியதுதான் என்று ஏகமனதாக ஒரு தீர்மானம் நிறைவேறியது.

ஃ ஃ ஃ

### சீனிக் கோட்டா

45-ம் வருஷத்தில் வீடுகளுக்காக 92 மூடையும், கடைகளுக்காக 68 மூடையும் கோட்டா இருந்ததாம். 46-ல் வீடுகளுக்காக 68 மூடையும் கடைகளுக்காக 54 மூடையும் கோட்டா வந்ததாம். ஆனால் 47-க்கு சர்வ அடக்கமாக 66 மூடைகளுக்குத்தான் கோட்டா ஏற்பட்டிருக்கிறதாம். பழய உணவுக் கமிட்டியின் கைங்கர்யம் இது. ஒரு விஷயம் கவனிக்கப்படவேண்டும். சுமார் 35,000 ஜனத் தொகையுள்ள ஸ்ரீவில்லிபுத்தூருக்கு 78 மூடை ஒதுக்கப்பட்டிருக்கிறது. 40,000 ஜனத் தொகையுள்ள காரைக்குடிக்கு 66 மூடைதான். இந்த அநியாயத்தை இப்பொழுதேற்பட்டிருக்கிற உணவுக் கமிட்டி கவனித்து உள்ள உரிமையைப் பெறவேண்டியதவசியமாகும்.

ஃ ஃ ஃ

### குமரப்பர் நூல் நிலையம்

சோமசுந்தரம் கழகத்தில் 5-2-47 காலை 10 மணிக்கு 'குமரப்பர் நூல் நிலயம்' ஆரம்பிக்கப்பட்டது. பல அன்பர்கள் குழுமியிருந்தனர். கானாடுகாத்தான் திருவாளர் சு. சித. முருகப்ப செட்டியார் அவர்கள் ஷை நிலயத்தைத் திறந்து வைத்து சொற்பொழிவு நிகழ்த்தினர். ஸ்தாபகர் திரு குமா. சோமசுந்தரம் அவர்களால் நன்றி கூறப்பெற்று தேநீர் முதலியன வழங்கியபின் கூட்டம் நிறைவேறியது.

### சாதி வித்தியாசம் காட்டக்கூடாது

பொது ஹோட்டல்களிலும் சலூன்களிலும் மக்களை அனுமதிப்பதில் ஜாதிவித்தியாசம் பாராட்டக் கூடாது என்பது சம்பந்தமாக கொச்சி அசெம்பிளியில் கொண்டுவரப்பட்ட பஞ்சாயத்து முனிசிபல் திருத்த மசோதாக்கள் சட்டமாயின.

## விநாயகராலயம் மாதா கோயிலாயிற்று

வந்தவாசி தாலுகாவைச் சேர்ந்ததும் ஆரணிக்கு 16 மைல் தூரத்தில் உள்ளதுமான மோசலாடி கிராமத்தில் உள்ள சுமார் 200 தீண்டாதார்கள் (50 குடும்பங்கள்) பாதிரிகளால் ரோமன் கத்தோலிக் மதத்தில் சேர்க்கப்பட்டு விட்டதாகத் தெரிகிறது. இந்த கிராமத்தில் இருந்த விநாயகர் கோயிலும் மாதாகோயிலாக மாற்றப்பட்டு விட்டது.

### அபுல்கலாம் ஆஸாத் சென்னைக்கு வருவார்

சென்னை தட்சினபாரத ஹிந்தி பிரசாரசபாவின் பட்டமளிப்பு விழா சொற்பொழிவை இடைக்கால சர்க்கார் கல்வி மந்திரி மௌலானா அபுல் கலாம் ஆஸாத் நிகழ்த்துவார். மார்ச் மாத மத்தியில் மேற்படி பட்டமளிப்பு விழா நடைபெறும்.

### பண்டித நேருவின் சிலை

லீஸிஸ்டர் கண்காட்சியில் ஜாகப் ஈப்ஸ்டீன் தயாரித்துள்ள பண்டித நேருவின் முக உருவச் சிலை எல்லாருடைய கவனத்தையும் ஏக மனதாகக் கவர்ந்துள்ளது. பண்டித நேரு சமீபத்தில் லண்டனுக்குப் போயிருந்தபொழுதுதான் இம் முகஉருவச் சிலை தயாராகியது. இது 2,000 பவுன்கள் பெறும் என நிபுணர்கள் கூறுகின்றனர்.

### சிவில் தடைகள் நீக்க மசோதா

சென்னை கவுன்சில் பிப் 10உ காலை திரு ஆர். பி. ராமகிருஷ்ணராஜு தலைமையில் கூடியது. ஹரிஜன முன்னேற்ற, விளம்பர இலாகாக்கள் மந்திரி திரு. வி. கூர்மையா, ஹோட்டல்கள், பொதுமக்கள்கூடுமிடங்கள், லாண்டிரி, சலூன், இடுகாடு, சுடுகாடு இவற்றில் தாழ்த்தப்பட்டவர்களுக்குள்ள தடையை ரத்து செய்து மற்றவர்களைப் போலவே எல்லா உரிமைகளும் உண்டு எனக்கூறும் சிவில் தடைகள் நீக்கச் சட்டத் திருத்த மசோதாவை முன் மொழிந்தார். ஜனாப் முகம்மது இப்ராஹீம் மசோதாவை ஓர் செலக்ட் கமிட்டியின் ஆலோசனைக்கு விடும்படி கேட்டதற்கிணங்க செலக்ட் கமிட்டிக்கு அனுப்பப்பட்டது. கே. பாஷ்யத்தைத் தலைவராகக் கொண்டு ஒரு செலக்ட் கமிட்டி நிறுவப்பட்டது.

### உழைப்பவர்களுக்கு லாபத்தில் பங்கு வேண்டும்

குடியானவனுக்கு அவன் உழுது பயிர்செய்யும் நிலத்தின் உற்பத்தியில் நேர்மையான பங்கு கிடைப்பதற்காக ஆரம்பிக்கப்பட்ட ஒரு இயக்கத்திற்குகாந்திஜி பிப் 1உ தமதுவாழ்த்தைத் தெரிவிக்கும்பொழுது கூறியதாவது:- அறுவடையில் மூன்றில்இரண்டு பங்கைக் கோரி குடியானவர்கள் ஆரம்பித்திருக்கும் இந்த இயக்கத்தை நான் வரவேற்கிறேன். நிலம், நிலச் சுவான்தார்களுக்குச் சொந்தமானதல்ல. ஆண்டவனுக்கே சொந்தம். ஆதலின் அதைப்பயிர் செய்யும் தொழிலாளருக்கு அது சொந்தமானது. ஆனால் கட்டாய முறைகளையோ, பலாத்காரத்தையோ பயன்படுத்த வேண்டாமென்று பொதுமக்களுக்கு நான் எச்சரிக்கிறேன். லட்சியத்தைப் போலவே அதையடைய நாம் பின்பற்ற வேண்டிய வழியும் புனிதமாக இருக்கவேண்டும். லட்சியம் நல்லதாக இருந்தால் போதும் அது சித்தியடைய நாம் பின்பற்ற வெண்டிய வழி எவ்வளவுதான் நீதியற்றிருப்பினும் குற்றமில்லையென்று கருதுவது விஷமத்தனம்.

## சென்னையில் கோயில் திறப்பு

சென்னை நகரிலுள்ள முக்கிய ஆலயங்களில் ஒன்றான கந்தசாமி கோயில் நேற்று மாலை தாழ்த்தப்பட்டவர்களுக்குத் திறந்துவிடப்பட்டது. சென்னை சட்டசபைத் தலைவர் திரு. ஜே. சிவசண்முகம் பிள்ளை தலைமையில் பல தாழ்த்தப்பட்டோரும், தலைவர்களும் கோயிலுக்குள் அழைத்துச் செல்லப்பட்டனர். கோயிலுக்குள் வெளியே நடந்த பொதுக் கூட்டத்தில், திரு. வி. ஐ. முனிசாமி பிள்ளை, சிவசண்முகம் பிள்ளை முதலியோர் பேசினர்.

### திருவண்ணாமலையில் 16ந் தேதி கோயில் திறப்பு

திரு பி. எம். வேலாயுதபாணி, ஹரிஜன எம். எல். ஏ. யின் தகவலின்படி திருவண்ணாமலை அருணாசலேஸ்வரர் கோயில் பிப்ரவரி 16-ந் தேதி ஹரிஜனங்களுக்குத் திறந்து விடப்படும் எனத் தெரிகிறது.

### பரமக்குடியில் கோயிலைத் திறக்க ஆதரவு

பரமக்குடி சௌராஷ்டிரர்களுக்குச் சொந்தமான சுப்ரமண்ய சுவாமி கோயிலை தாழ்த்தப்பட்டவர்களுக்கு திறந்துவிட வேண்டுமென்று மேற்படி கோவில் நிர்வாகஸ்தர்களும் ஷை சமூக மகாஜன சபையும் பிப்ரவரி 3-ம் தேதி நடந்த கூட்டத்தில் தீர்மானம் செய்துள்ளனர்.

### நெல்லை விற்காமல் வைத்திருப்போருக்கு எச்சரிக்கை

பின்னால் விற்பனை செய்வதால் அதிகவிலைகளோ அல்லதுபோனஸோ கிடைக்குமென்று உற்பத்தியாளர்கள் நெல், அரிசி முதலிய தானியங்களை விற்காமல் வைத்திருப்பதாகத் தெரிகிறது. இவ்வருஷம் தானிய விற்பனைக்காக போனஸுகள் கொடுக்கும் எண்ணம் சர்க்காருக்கு இல்லை. என்றும், தற்போதைய விலைகளை அதிகரிப்பதை இந்திய சர்க்கார் எதிர்ப்பதாகவும் பொதுமக்களுக்கு அறிவிக்கப்படுகிறது. ஆகவே பிற்பாடு நல்ல விலை கிடைக்கலாம் என்று எண்ணியிருப்பவர்கள் ஏமாற்றமடைவர். எனவே உபரிச் சரக்கை சர்க்கார் ஏஜெண்டுகளுக்கு உடனே விற்றுவிடும்படி அவர்களுக்கு யோசனை கூறப்படுகிறது என்று சென்னை சர்க்கார் அறிக்கை யொன்றில் கூறுகின்றனர்.

### தமிழ்த் திருநாள்

மேலைச்சிவபுரி மாணவர் நன்னெறிக் கழகத்தின் சார்பில் 21-1-47 வியாழக்கிழமை முதல் மூன்று நாட்கள் தமிழ்த் திருநாள் கொண்டாடப்பட்டது. முதல் நாள் கூட்டத்தில் வித்துவான் திரு. க. சின்னத்துரை அவர்கள் தலைமை தாங்கினர்கள். கொப்பனாபட்டிக் கலைமகள் கல்லூரித் தமிழாசிரியர் திரு. பண்டித வை. சுப்பிரமணிய ஐயர் அவர்கள் தமிழ்க் கொடி ஏற்றினர்கள்.

இரண்டாம் நாள் திரு. சுப. நடேச ஐயர் அவர்கள் தலைமையில் விழா நடைபெற்றது. மூன்றும் நாள் திரு. வித்துவான் க. சின்னத்துரை அவர்கள் தலைமையில் திருவாளர் ராம. சுப்பையர் பி. ஏ. அவர்கள் "தமிழரின் நாகரிகம்" பற்றிச் சொற்பொழிவாற்றினர்கள். பல மாணவர்கள் விழா நாட்களில் பேசினர்கள். கூட்டம் நடைபெறுங்கையில் இடையிடையே தமிழிசை விருந்து நடந்தது. செயலாளர் நன்றி கூறக் கூட்டம் இனிது முடிந்தது. கூட்டத்தில் பத்துத் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.



# புலவர் போட்டி

தேன்சொற் பசப்பித் திரியும் மகளிர்பால் சேர்ந்தனரோ?
கூனிக் குறுகின உள்ளமுடை நண்பர் குழாத் தோடு
தான்சேர்ந்து சீட்டாடப் போயி னரோநான் தனித்திருக்க
வானும் இருண்டு மழையும் துளித்தது வந்திலரே!

நா. வேத்தரசன், ஆத்தங்குடி.

தேனுங் கனியுந் தெவிட்டும் படிசெய் செழுந் தமிழின்
ஆன பொருளின் அமுதைப் புகட்டுவன் யானெனவே
போன கணவனும் பூதலம் போற்றப் பொழுதளவும்
வானும் இருண்டு மழையும் துளித்தது வந்திலரே.

சுப. அழகப்ப செட்டியார், கூழிபிறை.

ஆனின் மணியோசை ஆவென் றலறவே வைத்திடவும்
மேனியில் மாந்தளிர் போல்மாமை நன்றுப்ப் படர்ந்திடவும்
தானணி கையின் வளையல்கள் தானே கழன்றிடவும்
வானும் இருண்டு மழையும் துளித்தது வந்திலரே.

சி. சோக்கலிங்கம், க. செ. கல்லூரி.

கோனுமொவ்வா எந்தன் கணவர் கணநேரம் சென்றபின்
தானும் திரும்பித் தனிமையை நீக்குவே னென்றுபொல்லாக்
கானகம் ஏகினரே மாலைப்பொழுதும் கழிந்தது
வானும் இருண்டு மழையும் துளித்தது வந்திலரே.

கா. கிருஷ்ணப்பன், கோங்கர்.

"தேனும் விரும்பிலேன் செந்திரு வேயுந்தன் செவ்விசழால்
ஈனும் அமுதிற்குத் தானேக்கம்" என்றே எழுதியவர்
நானும் தெருவினில் நாடோறும் நின்று நலிந்தனனால்
வானும் இருண்டு மழையும் துளித்தது வந்திலரே

மு. ரேங்கநாதன், புதவயல்.

போனவென் காதலர் போர்முகம் சென்றாரோ, பாங்கியரே
ஆனதன் போரை அவர்வீ ரமொடு புரிந்தனரோ
மானம் இழந்து மடிந்தாரோ, என்செய்வேன், பொல்லாத இவ்
வானம் இருண்டு மழையும் துளித்தது வந்திலரே.

அள. சுப்பிரமணியன், ஆவினிப்பட்டி.

தேனும் இனிப்பறத் தெள்ளுந் தமிழ்கூறித் தீயுணங்கு
கானங் கடந்தாரின் காதலர், தோழி! கழிமழையால்
கானந் துளிர்க்கின்ற கார்க்கண் வருவதாய்ச் சென்றவர்தாம்
வானும் இருண்டு மழையும் துளித்தது வந்திலரே.

வே. அண்ணாமலை, க. செ. கல்லூரி மேலைச்சிவபுரி.

தேனும் அமிழ்தும் தெவிட்டவே செஞ்சொலின் செந்தமிழால்
பானல் மொழியயில் பான்மையை பற்றின்றிப் பற்றறவே
கானும் அரணும் கடந்தேசெல் கற்றசேர்க் காதலர்தான்
வானும் இருண்டு மழையும் துளித்தது வந்திலரே.

க. தி. சுந்தரம். வலம்புரி.

மானும் குயிலும் மயிலும் மகிழ்ந்தின்று வாழ்ந்திடவும்
நானும் அலைபாம்கடல்போல் அறிவழிந்து அல்லலுறப்
பானும் மறையப் பலவாய் மனம்வாட எம்தலைவர்
வானும் இருண்டு மழையும் துளித்தது வந்திலரே.

கரு. காசி, மேலைச்சிவபுரி.

மீனும் மதியும் விளங்கும் இரவினில் வேறொருவர்
தானும் இலாத தனிமை தனில், எலைத் தான் அணைத்துத்,
தேனும் நிகர்க்கும் சிறந்த மொழிசொலிச் சென்று விட்டார்;
வானும் இருண்டு மழையும் துளித்தது வந்திலரே.

அண. ராமநாதன், வேகுப்பட்டி.

பானும் மறைந்து பகலும் இருண்டு பசுமயில்கள்
தானும் அகவின கார்க்குயில் ஆர்த்தன, தாரணியில்
கானும் மலையும் கடந்த தலைவர் கருதிலரால்
வானும் இருண்டு மழையும் துளித்தது வந்திலரே.

மு. சேதுராமன், மேலைச்சிவபுரி.

நானுந் தனித்துயர் நாதனை நாடிகற் காதலினால்
ஊனும் உறக்கமும் இன்றி இளைத்தது உள்ளமதே
பானும் மதியும் பரிந்தென்னை வாட்டிப் பரிதவிக்க
வானும் இருண்டு மழையும் துளித்தது வந்திலரே.

சு. வயி. சுப. சாத்தப்பன், சொக்கலிங்கம்புத்தூர்.

மானும் நிகரில் வதனத் தனித்திரு மங்கைநல்லாள்
வானும் துதித்திடும் வள்ளி கணவனென் மையல்கண்டு
தேனுங் கனியுந் தெவிட்டப் புசித்தெனைச் சேர்வதற்கு
வானும் இருண்டு மழையுந் துளித்தது வந்திலரே.

தே. நா. இராமநாதன் செட்டியார், கூழிபிறை.

ஆன பகல ஞாயிற்றுங் காணாள் ஆவிட்டிப்
போன கணவரி னுங்காணேன் போனர்க்குப் போக்கிடத்தில்
ஆனதோ தீங்கேதும்! ஐயகோ! என்செய்வேன்! யார்துணையோ!
வானம் இருண்டு மழையும் துளித்தது வந்திலரே!

ஆனபகல்-பகற்பொழுதும் கழிந்தது
அணுபிறையுங் காணாள்-சிறிதளவு பிறைச்சந்திரனும் காணத் அமாவாசை நாளாகும்

சோம. திருநாவுக்கரசு, நாச்சியாபுரம்.

மீனும் மருளும் விழியாள் பெருங்காம வெம்பிணியில்
ஊனு முருகி உயிருங் குலைந்தலந் தாசலாடக்
கூனும் பிறையணி கூத்தன் பருகிய கொல்விடம்போல்
வானும் இருண்டு மழையுந் துளித்தது வந்திலரே.

ராம. சோமசுந்தரம், கதிரேசன் கழகம். காரைக்குடி.

அடுத்த ஈற்றடி:—

செல்வர்க்கு முண்டு சிறப்பு.



## இளைஞர்கட்கு ஓர் வேண்டுகோள்

நந்தமிழ் நாட்டிலே புராதனமான பல பாடல்பெற்ற தேவாலயங்கள் அனைத்தும் ஹரிஜனங்களுக்குத் திறந்து கடவுள் வழிபாடு செய்ய உரிமை யளித்திருப்பதைப் பார்த்து மகிழ்கின்றோம்; பாராட்டுகின்றோம். அதே நிமிடத்தில் நம் செட்டிமார் நாடு இன்னும் இவ்வழியைப் பின்பற்றவில்லையே யென வருந்த வேண்டியிருக்கிறது. ஆனால் அதை நிவர்த்திக்கக் கூடிய சக்தி இளைஞர்களாகிய நம்மிடையே இருக்கிறதென்பதை நாம் உணர்கிறோம். எனினும் விஷயத்தை மட்டிலும்தான் செயலுக்கு இன்னும் கொண்டுவரவில்லை. நம்பிக்கையும், நாணயமும், தரும சிந்தையும், இரக்க சித்தமும் படைத்த நகரத்தார் வம்சத்தில் பிறந்த நாம் இதில் பிற்போக்கான நிலைமையில் இருப்போமானால் இதைப் பிற சமூகங்கள் பார்த்து நம்மை எள்ளி நகையாடும். அவ்விழி சொல்லை நாம் அடையாது நமது கோத்திரத்தின் அடிப்படையாகவுள்ள ஒன்பது நகரக் கோயில்களையும், திறந்து ஹரிஜனங்களுக்குக் கடவுள் வழிபாடு செய்ய உரிமையளிக்கத் தயாராக வேண்டும். நமது பெரியோர்கள் பிற்போக்காயிருப்பினும் மயூரகிரி ஸ்தலம் திறந்திருப்பதையும், நமயால் திருப்பணிகள் செய்து பூர்த்தியான பல பாடல்பெற்ற கோயில்கள் திறக்கப்படுவதையும், அவர்களுக்கு எடுத்துக் கூறி நம்வழியில் திருப்பவேண்டும். வழிக்குத் திரும்பாவிடில் ஒவ்வொரு நகரக் கோயிலிலும் அக்கோயில் இளைஞர்களைக்கொண்ட நகரக் கூட்டங்கள் கூட்டவேண்டும். பெரியோர்கள், காரியக்காரர்களை வரவழைத்து விஷயத்தை எடுத்துக் கூறவேண்டும். இல்லையேல் கோயிலைத்திறக்க உறுதி செய்து விஷயத்தைச் செயலில் காட்ட முன்னணியில் இருக்கவேண்டும். அப்போதுதான் இவ்வுலகம் நம்மைப் பாராட்டும். ஆகவே இளைஞர்கள் அனைவரும் இவ்வழியில் நின்று தொண்டாற்ற முன் வருவார்களாக!

கா. அருணாசலன்

### சநாதனத்திற்கு சமஸ்தான சன்மானம்!

திருவாங்கூர் சமஸ்தானத்திலுள்ள ஆலப்புழை சநாதன தர்ம கல்லூரிக்கு திருவாங்கூர் சர்க்கார் ரூ 5 லட்சம் மான்யம் அளித்திருக்கிறது.

### கோலாலம்பூர்

அகில மலயா நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் வர்த்தக சங்கக் காரியதரிசி திரு அ. மு. மு. குமரப்ப செட்டியார் ராஜிநாமாச் செய்திருப்பதால் அன்னாருக்குப் பதிலாக கோலாலம்பூர் திரு நா. நா. நா. சிவலிங்கஞ் செட்டியாரைக் காரியதரிசியாக 4-1-47ந் தேதி நடந்த நிர்வாகசபைக் கூட்டத்தில் தேர்ந்தெடுத் திருக்கிறார்களென்பதை ஷை சங்கக் காரியதரிசி அறிவிக்கிறார்.

### சிலாங்கூர்

சிலாங்கூர் நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் வர்த்தகசங்கக் காரியதரிசி கோலாலம்பூர் திரு ஆ. வி. ப. முரு. மாணிக்கம் செட்டியார் தாய்நாடு செல்வதை முன்னிட்டு ராஜிநாமா செய்திருப்பதால் அன்னாருக்குப் பதிலாக கோலாலம்பூர் பெ சு சுப்பய்யா செட்டியாரைக் காரியதரிசியாக 3—1—47ல் நடந்த நிர்வாக சபைக் கூட்டத்தில் தேர்ந்தெடுத்திருக்கிறார்களென்பதை ஷை சங்கக் காரியதரிசி அறிவிக்கிறார்.

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

கடவுளிடம் வரம் கேட்டவர்-அருளும் அறமும் அன்பும் ஆகிய நற்குணங்களை வேண்டி விரும்பினது தெரிகிறது. 'யாம் இரப்பவை பொருளும் பொன்னும் போகமும் அல்ல. நின்பால் அருளும் அன்பும் அறனும் மூன்றும்' என்றே புலவர் வேண்டினது பரிபாடலால் தெரியவரும். ஆகவே கடவுள் வணக்கத்தின் பெரும்பயன்-இவ்வுலகிலே தெள்ளிய வாழ்வு-அருள் வாழ்வு வாழவேண்டுவது தவிர மோக்ஷ உலகக் கற்பனை வாழவில்லை என்ற குறிப்பையும் காணுகிறோம். மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார் நிலமிசை நீடுவாழ்வார் என்ற வள்ளுவர் வாக்கும் இங்கு நோக்கத்தக்கது. இம்மை மறுமை பற்றிய உண்மைகளில் கருத்து வேறுபாடில்லையாயினும் அது கருதி இங்கு வாழ்வு போலியாகிக் கழியத் தமிழ் மக்கள் இடம் கொடுப்பதில்லை. கண்கண்ட இவ்வுலகப் புகழ் காட்டி அது பெறவாது முயலுக என்று சொல்லுவது தான் தமிழர் அறமுறையே ஒழிய காணாத வீட்டுலகவாசை காட்டி இங்கு எந்த வழிபாட்டையும் இயற்றுமாறு தமிழர் தம் பழம் நூல்கள் பேசவதில்லை. இம்மைச் செய்தது மறுமைக்கு ஆம் எனும் அறவிலை வணிகன் ஆய் அல்லன்-பிறரும் சான்றோர் சென்ற நெறி என ஆங்குப் பட்டன்று அவன் கை வண்மை என்ற புறத்தின் கருத்து மிக நயமுடையது. "அறம் செய்வமா? வேண்டாமா? என்று பலரும் ஐயுறுகின்றனர். வேண்டியதில்லை. அறம் துணிந்து செய்தால் வீட்டுலகு நிச்சயம் இல்லை எனில் மறுபிறப்பில் நன்மை ஆவது உண்டு. மறுமையும் இல்லை என்றால் இவ்வுலகில் புகழ் கண்டிப்பாய் உண்டில்லையா! எப்படியும் நீதற்ற புகழுடம்புடன் இறத்தல் தலையாயது. அதனால், ஆலோசனை இன்றி அறம் செய்க என்று வற்புறுத்தும் ஒரு புறப்பாட்டின் அமைதி அழகும் அவ்வுண்மையை நமக்கு நன்கு வலியுறுத்துகிறது!

கடவுளருக்கு வழிபாடியற்றும் காலங்களிலே 'வேதம்' சொல்லித் துதிப்பதுடன், புலவராது தமிழ்ப் பாடல்களையும் சொல்லி வழிபட்டு வந்த செய்தியைப் பரிபாடல் தருகிறது. சிலப்பதிகாரம் 'வண்டமிழ் மறையோர்' என்ற தமிழ் வேதம் ஓதுவாரைச் சுட்டிற்று. 'தொல்லுயிர் வழங்கிய அவிப்பலி'—என்ற புறநானூற்றடியில் 'தொல்லுயிர்' என்றது. முன்னைய பல வேறு பிறப்பிலே பழகித் தொன்மையுற்ற உயிர் என்ற பொருளிலே ஆகும். கடவுளர்கள் இவ்வுலகிலே வந்து பிறப்பதாகக் கொள்ளும் கொள்கை வள்ளுவனார் காலமுதலே கண்டபழமை உடையது எனத்தெரிய வருகிறது. முறை செய்து காப்பாற்றும் மன்னவனை இறை என்றே அவர் பேசினார். கடவுளர்க்குப் பிறப்பு ஒப்புக்கொண்டாலும் நம் பிறப்பு முறையினின்று,

## கடவுள் வழிபாடு

அப்பிறப்புக்களை வேறு பிரித்துக் காட்டியது. பழந்தமிழகம் அவர் தம் பிறப்புக்கு வேற்றுமை தன் இச்சையாலே பிறத்தல், நம்பிறப்பு கருமவசத்தாலே வருவது "பிறவாப் பிறப்பிலை. பிறப்பித்தோர் இலையே" என்ற இதனைப் பரிபாடல் காட்டுகிறது. தாயும் தந்தையும் இன்றி கருமவசம் காரணம் இன்றி தம் இச்சையால் மேற்கொள்ளும் வடிவுகள் அவை என்ற கருத்தைத் தெளிவுற விளங்குகிறபடி காண்க.

எனவே, பழந்தமிழர்கள் இயற்கை வழி வாழ்ந்து, அதற்கேற்பக் கடவுளியல் தெரிந்து, அன்பு முறையால் வழிபாடியற்றி-அறிவுக்கு இயைந்த முறையிலே 'கடவுள் வழிபாட்டைப்' பேணி, அவ் வெல்லாவற்றையும் மறு உலக வாழ்விற்கு அடிப்படை நலங்களாகக்கொண்டு ஆதரித்துப் போற்றி வந்தார்கள் என்பதை ஒருவாறு உணருகிறோம். ஆனால் இவ்வளவு தூய பண்பாட்டியல்புகொண்ட நாட்டிலே 'பின் நாளைய நிலை' என்னவாக மாறிற்று, இன்றைய நிலை எத்தகைய படுகுழியிலே கொண்டு நாட்டினைக் கவிழ்த்திருக்கிறது? என்று சிறிது சிந்தியுங்கள். என் இந்தத் தாழ்நிலை! காணுவது நம் கடமை!

வாழ்க்கைக்குத் துணைபுரியுமாறு கண்ட 'கடவுளுணர்வு' இன்று 'தடை' என்று படுகிறது. ஆளுக்கு ஒரு ஆண்டவனைக் காட்டும் அறிவற்ற நிலை இங்கு வந்துவிட்டது. ஆண்டவன் திரு முன்பு அனைவரும் சமம்' என்று-இன்றும் ஒப்புக்கொள்ள முடியாத நிலை இருக்கிறது. போலிச்சாதி சமய வேற்றுமை, அது காரணமாய் வரும் ஒற்றுமைக்குலைவு. 'கடவுள் ஆட்கொள்ளும் போது—பக்தனைப் பார்த்து நியமைக் குதிக்கக் கட்டளையிட்டுப் பூணூல் உருவோடு தெரிந்த பின்னரே கோவிலுக்கு வரும்படி செய்தான்' என்று தமிழனே புராணம் பாடிவிடும்படிக்கான நிலைமை! கடவுளரே, திருடவும்-பொய்-விபசாரம் செய்து சீரழிந்து சிறுமைப்பட்ட புராணப் புனைந்துரைகளின் மலிவு. கடவுள் பெயரால் வீட்டுலகத்திற்கு அனுப்ப-ஒரு பகுதியாரால் மட்டுமே முடியும் என்ற மூடநம்பிக்கை. இப்படி எவ்வளவோ கேடுகள்! அடுக்கிக் கொண்டே போகலாம்!

உயர் நிலையிலே, உலகம் போற்றும் முறையிலே கடவுளியல் கண்டு தெளிந்து வழிபாடு புரிந்த தமிழன் இப்படிக் கேடடைந்ததின் தலையாய காரணம்—பிறருக்கு அறிவடிமைப் பட்ட தலைவிதியேதான்! "தன்னதை மறந்தான்: மற்றவர்களதை அப்படியே ஏற்று மகிழ்ந்தான்." கலப்பிலே, வளர்ச்சிக்குப் பதில் அறிவடிமையால்-அழிவே கண்டான்! இன்றுள்ள, கடவுள் கொள்கையாலும்-வழிபாட்டு முறையாலும்-மதச் சடங்குகளாலும்-நிலைகண்டு வெறுத்து-அவை அற்ற ஒரு நல்ல முறையை மேற்கொண்டு நடத்தத் திட்டம் நாம் வகுத்தால்-அது "சங்க காலத் தமிழர்" கண்ட கடவுட் வழிபாட்டு முறையாகவே நமக்கு இருக்க முடியும்! இல்லையா? இவ்வளவு சீரிய நிலையிலே, 'உலகம் மாறினாலும்: தான் மாறுது நின்று' நன்மை பயக்க வல்ல-பல துறைக் கருத்துக்களை' உடைய கருவூலம் சங்க நூல்கள்! அதனை மறவாது படித்துப் பயனடையும் தகுதி படிப்பிலேவரும்படி 'கல்வித்திட்ட மாறுதல்' பற்றிப் பேசப்படும் தற்காலத்திலே நாம் பல துறையிலும் வற்புறுத்த வேண்டும். அதனால் நமக்கும் நல்லது. நாட்டிற்கும் புகழ் உண்டு!











# அம்மா

[ராம. அடைக்கலவன், ராயவரம்.]

அம்மா...... என்ன அழகான வார்த்தை. அன்பொழுகும் வார்த்தை. அகிலமெல்லாவற்றையும் அம்மா என்னும் ஒரு வார்த்தையில்கூட அடக்கி விடலாம் போலிருக்கிறது. அழும் குழந்தை முதல் அறுபதாண்டுக் கிழவர் வரை சொல்லக்கூடிய வார்த்தை "அம்மா"

சாயங்காலம் பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பிக் களைப்புடன் வரும் பொழுது தகப்பனார் அதிகாரமான குரலில் "டேய் அங்கே போய்விட்டு வா, இங்கே போய் இதை வாங்கிக் கொண்டுவா" என்று உத்தரவுகளைத் தான் போடுவார். ஆனால் அம்மாவோ "வாடா கண்ணே; ஏன் இவ்வளவு நேரம் வருவதற்கு. உனக்கு இன்று ஒரு புதிய பலகாரம் செய்து வைத்திருக்கிறேன் வந்து சாப்பிடடா" என்று அணைத்து ஒரு முத்தமிடுவாள். அப்பாவின் அதிகாரமும், அடியும், உதையும் குழந்தைகளைப் பாதிக்கும் பொழுது அம்மாவிடம் தஞ்சம் புகுவதைத் தவிர அவர்களுக்கு வேறு புகலிடமில்லை. குழந்தைகள்மேல் அப்பாவிற்குக் கோபம் வரும் சமயத்தில் அம்மா வீட்டில் விட்டாலோ அப்பா பாடு கொண்டாட்டந்தான். தீபாவளிக்கு வேட்டு வெடிகள் சுட்டுக் தள்ளுவதைப்போல் ஜமாய்ச்சி விடுவார். ஆனால் அதிர்ஷ்டவசமாக அம்மா இருந்தாலோ அவரது அதிகாரமும், பாய்ச்சலும் சற்று அடங்கியேதானிருக்கும். அப்பா சீறும்பொழுதெல்லாம் அம்மா பரிந்து பேசுவாள். தன் குழந்தைகளுக்காக அப்பாவின் குரலில் அதிகாரம் தொனிக்கும். அம்மாவின் குரலிலோ அன்பு தொனிக்கும். அப்பாவின் கண்கள் சுட்டெறித்து விடுவதைப் போல் பார்க்கும். அம்மாவின் கண்களோ பாசஉணர்ச்சியுடன் குழந்தைகளைப் பார்க்கும். அடுத்தவீட்டுப் பையனுடன் சண்டைபோட்டால், அம்மா குழந்தைக்குப் பரிந்து வருவாள். அப்பா குழந்தையின் முதுகைப் பதம்பார்க்க வருவார். அப்பாவின் மேஜைமீதிருக்கும் காகிதங்களைக் கலைத்துவிட்டு, இங்கிப் பாட்டிலையும் தட்டிவிட்டால் உதையும், அடியும், திட்டும் பலமாகக் கிடைக்கும். ஆனால் அம்மா புழங்கும் அடுப்பங்கரையிலிருக்கும் பாத்திரங்களை உருட்டி விட்டாலோ (அம்மா தன் குழந்தையின் விஷமத்தனத்தைப் பற்றி பெருமிதத்துடன்) "நீ பொல்லாத சுட்டிடா" என்று அருமையாகச் சொல்வதோடல்லாமல் எடுத்து அணைத்து ஒரு முத்தம் கொடுப்பாள். அப்பாவிடம் ஏதாவது கேட்கச் சென்றால் சள் சள் என்று எரிந்து விழுவார். ஆனால் அம்மாவிடம் ஏதாகிலும் கேட்கச் சென்றால், நமக்கு வேண்டுபவற்றையும் தந்து இன்னமும் என்னவேண்டும் என்று ஆசையோடு கேட்பாள். அப்பா அதிகாரத்தால் கட்டுப்படுத்த முயலுவார். அம்மா அன்பினால் கட்டுப்படுத்துவாள். அவள் முயலவேண்டிய தேவையில்லை. அப்பாவிற்குத் தான் அதுதேவை. "ஏண்டா பரீக்ஷை சமயம் பார்த்து இரவு நேரத்தில் கொஞ்சங்கூடப் படிக்கமாட்டேனென்கிறாய்" என்று அப்பா உறுமுவார். (அவருக்கு இரவு பதினொரு மணிவரை படிப்பது கொஞ்சமாகத் தோன்றும்) அம்மாவோ ஏண்டா தினமும் இப்படி விழித்துப் படித்துப் படித்து உடம்பைக் கெடுத்துக்கொள்கிறாய். காலத்தில் போய்ப் படுத்துக் கோடா" என்று சொல்லி ஏற்கனவே நமக்கு வந்துள்ள அரைகுறை தூக்கத்திற்குத் தூபம் போடுவாள். அம்மாவின் பெயரால் அப்பாவின் அதிகாரத்தைத் தட்டிவிட்டு நாம் சீக்கிரம் படுக்கைக்குச் செல்லலாம். குழந்தைப் பருவத்திலிருந்து சற்று மாணவராகிய பிறகும் அப்பா நாம் சொல்லும் சில யோசனைகளையும், பேச்சுக்களையும் கேட்கமாட்டார். அம்மாவோ, நாம் சொல்லும் கருத்துக்களை அறிந்து கொள்வதுடன், இனி நம் மனத்திலுள்ள கருத்துக்களைத் துருவி ஆராய குறுக்குக் கேள்விகள் பல கேட்பாள். பையனுக்குப் பெண் பேசும் விஷயத்தில் தகப்பனார் பேசியிருந்த பெண் பையனுக்குப் பிடிக்காமல் அவன் தன் தகப்பனாரிடம் சென்று 'அப்பா எனக்கு அந்தப் பெண் பிடிக்கவில்லை' என்று சொன்னால் அவ்வளவுதான். அப்பா கிளம்பி விடுவார், கோபாவேசத்துடன். 'நேற்றுப் பிறந்த பயல். கொழுப்பைப் பாரு. என்னைவிட உனக்கு என்னடா தெரிஞ்சுபோச்சு அதிகப்பிரசங்கி' என்று பக்கத்து வீட்டுக்காரர்களுக்கெல்லாம் கேட்கும்படி ஒரு குட்டிப் பிரசங்கம் செய்து விடுவார். பாவம்! இதற்குப் பையன் அம்மாவிடம் அடைக்கலம் புகுவதைத் தவிர வேறு வழி இல்லை. அம்மா நம்மை வருந்தி வருந்தித் தன் அருகில் அழைப்பாள். அப்பாவோ பையன் தன் அருகில் வராத வரை க்ஷேமம் என்று நினைப்பார். ஏனெனில் பையன் செலவிற்கு ஏதாவது கேட்டுவிடுகிறானே என்று அப்பாவிற்கு உள்ளூரப் பயம்.

அப்பாவிடமிருந்து, அபாயமென்றால் பதுங்கிக் கொள்வதற்கு ஷெல்டர், அம்மாவை அப்பா முன் நிறுத்தி அவள் பின்னால் நாம் நிற்பதுதான். ஆனால் அப்பாவினால்தான் நாம் அம்மாவிடம் வைக்கிற அன்பு பிரசித்தம் பெறுகிறது, என்பதையும் மறந்து விடக்கூடாது. அவர் கடிந்து விரட்டுவதினால்த் தானே அம்மாவிடம் தஞ்சம் புகுவதின் அருமை நமக்குத் தெரிகிறது. அப்பாவின் கடினச் சொற்களைக் கேட்பதினால்த் தானே அம்மாவின் அன்புச் சொற்கள் இனிக்கின்றன. மாலையில் பள்ளிக்கூடத்திலிருந்து வந்தவுடன் அப்பா வீட்டிற்குள் கூட புக விடாமல் வாசலில் நின்று கொண்டு 'அங்கே போ, இங்கே போ' என்று அதிகாரமிடுவதினால்த்தானே அம்மா அளிக்கும் வரவேற்பின் மகிமை நமக்குத் தெரிகிறது. எதிரியும் தக்க பலமுள்ளவனாயிருந்தால்தானே வெற்றியின் அருமை தெரியும். நிழலருமை வெயிலில்தானே. சாம்பாரை மட்டிலும் சாப்பிட்டாலும் ருசி நன்றாயிருக்காது. அல்லது சாதத்தை மட்டிலும் சாப்பிட்டாலும் அதன் ருசி நன்றாயிருக்காது. இரண்டையும் கலந்து சாப்பிடும் பொழுது தான் சரியான-ருசி ஏற்படுகிறது. அப்படித்தான் அப்பாவினால், அம்மாவின் அன்பும், அம்மாவினால் அப்பாவின் தன்மையும் தெரிகின்றன.

இப்படி அம்மாவைப் பற்றி அழகாக எவ்வளவு வேண்டுமானாலும் அடுக்கிக்கொண்டே போகலாம். ஆனால் இதைப் படித்த அப்பாக்களுக்கு இப்பொழுது என்மேல் படு கோபமாயிருக்கும். ஆகையால் அவர்கள் கோபம் உச்சி நிலையை அடைவதற்கு முன் நான் என் அருமை அம்மாவிடம் ஓடி விடுகிறேன். போவதற்கு முன் இதைப் படித்த அப்பாக்களுக்கும், அம்மாக்களுக்கும் ஒரு வணக்கம். ஆனால் அந்த வணக்கம் இந்தக் கட்டுரையைப் பொறுமையுடன் படித்து வந்த அப்பாக்களுக்கு விசேஷமாக உரியது என்பதையும் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.



## நோட்டீஸ்

இதனால் சகலமான பேர்களுக்கும் அறிவிப்பதென்னவென்றால்:—

வெத்தியூர் லேட் மா. லெ. லெக்ஷ்மணன் செட்டியாரின் பேரன்களான நமது கக்ஷிக்காரர்களுக்கும் ஷை யார் சிறிய தகப்பனார் லெக்ஷ்மணன் செட்டியாருக்கும் குடும்ப சொத்துக்களில் சமபாகம் பாத்யமாயிருக்க தனக்கு ஏகதேசத்தில் பாத்யப்பட்டது போல் மோசக்கருத்துடன் ஷை லெக்ஷ்மணன் செட்டியார் ஷை சொத்துக்களில் சிலதை சிலர்களுக்கு சமீபத்தில் கிறயம் பண்ணியிருப்பதாக வெளியாவதால் அது நம்முடைய கக்ஷிக்காரர்களை கட்டுப்படுத்தாதென்பதையும் ஷை லெக்ஷ்மணன் செட்டியாரிடம் இனிமேலும் ஷை குடும்ப சொத்துக்களை யாரும் கிறயம் முதலியது வாங்கினால் அவைகளும் என் கக்ஷிக்காரர்களை கட்டுப்படுத்தாதென்பதையும் அறிய வேண்டியது.

தேவகோட்டை
7—2—1947

G. ராகவன்,
வக்கீல்





## நோட்டீஸ்

### ராம்நாட் டி. கோர்ட்டு

O. P. No. 6 of 1947

A. V. CT. N. N. நாச்சியப்ப செட்டியார் } மனுதார்

இதனால் சகலமானவர்களுக்கும் தெரியப்படுத்துவது என்னவென்றால் கண்டனூரில் இறந்துபோன காவேரியாச்சியின் குமாரர் மைனர் நாச்சியப்பனுக்கு பாத்தியப்பட்ட சகல சொத்துக்களுக்கும் தன்னை கார்டியனாக நியமிக்க வேண்டுமென்று மனுதார் மனுக்கொடுத்து ஷை மனு 28—2—47-௨ வாய்தா ஏற்பட்டிருப்பதால் அது விஷயமாக ஆக்ஷேபணையுள்ளவர்கள் ஷை கோர்ட்டில் ஷை தேதி பகல் 10 மணிக்கு ஆஜராகி தெரியப்படுத்திக்கொள்ளவும்.

S. சுந்தரமய்யர்
வக்கீல்

மதுரை
5—2—47

## கண்ணப்பர்குல சங்கம்

பிப்ரவரி 2உ மாலை 4-30-மணிக்கு தேவகோட்டைக்கு அடுத்த கல்லுப் பட்டியில் இச்சங்கத்தின் மகாசபைக் கூட்டம் நடைபெற்றது. கூட்டத் திற்குத் தேவகோட்டை காங்கிரஸ் ஊழியர் திரு. நா. பரஞ்ஜோதி அவர் கள் தலைமை வகித்தார். புதுக் கோட்டை வி. ரெங்கராஜன், மு. சேதுராமன், நா. மு. நாச்சியப்பன், ச. சின்னச்சாமி, பெர. சொக்கலிங் கம், அ. இராமசாமி முதலியோர்கள் சமூக முன்னேற்றம் சங்கத்தின் அவ சியம் என்பதைப் பற்றிப் பேசினர் கள். பின்னர் சில தீர்மானங்கள் நிறைவேற்றப்பெற்று வந்தனோப சாரத்துடன் கூட்டம் இனிது முடிவு பெற்றது.

## தமிழ்த் திருநாள்

பிப்ரவரி 2உ மாலை ராயவரம் விவே கானந்த வாசகசாலையின் சார்பில் உயர்திரு ப. வ. ராம. குழந்தையன் செட்டியார் எம். எல். ஸி. அவர்கள் தலைமையில் தமிழ்த்திருநாள் கொண் டாடப்பட்டது. அவ்வமயம் திரு வாளர்கள் டாக்டர். ஷண்முகம் பிள்ளை, ஆர். பத்மநாபன், கணேச சாஸ்திரி, எஸ். நாராயணன், ஸி. டி. சுப்பிரமணியன் ஆகியோர் சொற் பொழிவு நிகழ்த்தினர். தமிழின் சிறப்பு தமிழர் பெருமை, தமிழர் நாகரிகம் ஆகியவை நன்கு எடுத்துரைக்கப் பட் டன. பின்னர் சிறுவர்களுக்குப் பாட் டுப் போட்டி ஒன்று நிகழ்த்தப் பட்டு பரிசுகள் வழங்கப்பெற் றன.

## புதிய மந்திரி

திரு பிக்கினி விராசாமி ராஜி னுமாவை சென்னை கவர்னர் அங்கி கரித்துவிட்டார். அவருக்குப் பதிலாக திரு பிக்கினி வெங்கடரத்னம் காட்டி லாக மந்திரியாக நியமிக்கப்பட்டுள் ளார். இவர் சென்னை சர்க்காரின் 13 வது மந்திரியாவார். பிப் 6உ காலை ராஜவிஸ்வாசப் பிரமாணம் எடுத் துக்கொண்டு வேலை ஏற்றுக் கொண் டார். இவருக்கு வயது 54 ஆகிறது. விவசாயத் தொழிலில் அதிகம் ஈடுபட் டுள்ளவர். கூட்டுறவு இயக்கத்தில் பல ஆண்டுகளாகப் பங்கெடுத்துக் கொண்டுள்ளார். சென்னை மாகாண கூட்டுறவு யூனியன் தலைவராகவும், ராமச்சந்திரபுரம் கூட்டுறவு மத்திய பாங்கியின் தலைவராகவும் இருக்கிறார்.

## கருங்குளம் இளைஞர் கழகம்

31-1-47 காலை மணி 9-30 க்கு இவ் வூர் கொடி ஸ்தம்பத்திற்கு அருகாமை யிலுள்ள தென்னஞ் சோலையில் மேன்மைதங்கிய திரு நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் அவர்களின் 51 வது பிறந்ததினக் கொண்டாட்டம் கழ கத் தலைவர் திரு. வயி. அண்ணாமலை அவர்களின் தலைமையில் கூட்டம் ஆரம்பமாயிற்று. பல அன்பர்கள் திரு நேதாஜி அவர்களின் செயற்கரிய நாட்டுத் தொண்டைப்பற்றி சொற் பொழிவு நிகழ்த்தியதுடன் அன்னாரின் நீண்ட ஆயுளுக்காக இறைவனைப் பிரார்த்தித்து சுதந்திரப் பிரதிக்ஞை எடுத்துக் கொண்டனர். வந்தனோப சாரத்துடன் கூட்டம் நிறைவேறி யது.

# பிர்தான் ஜுகர்மால் பாங்க் லிமிடெட், திருச்சினுப்பள்ளி

1933ல் நிறுவப்பெற்றது.

தலைமை ஆபீஸ்:—"பிர்தான் பில்டிங்ஸ்" திருச்சினுப்பள்ளி. கிளைகள்:—சென்னை, புதுக்கோட்டை, கண்டனூர், காரைக்குடி, ஸ்ரீரங்கம்.
உள்ளூர் கிளைகள்:—மலைக்கோட்டை, வரகனேரி, உறையூர்.

## 1946ளு டிசம்பர் 31உ யன்றுள்ள கணக்கின் சுருக்கம்

### பொறுப்புகள்

| | | |
|---|---|---|
| அதிகாரம் பெற்ற மூலதனம் ரூ. | 700,000 0 0 | |
| வெளியிட்டு, வாக்களிக்கப் பட்ட மூலதனம் .... | 500,000 0 0 | |
| செலுத்தப்பட்ட மூலதனம் | | 2,50,000 0 0 |
| கோரப்பட்டு ரிசர்விலுள்ள மூலதனம் | | 5,875 0 0 |
| ரிசர்வ், மற்றும் இதரநிதிகள் | | 87,000 0 0 |
| டிபாசிட்டுகள் .... | | 45,53,150 13 9 |
| சில்லரை இனங்களும், வியா பார கிரெடிட்டுகளும் .... | | 9,28,309 8 6 |
| வசூலாகவேண்டிய பில்லுகள் | | 57,499 14 4 |
| பிராஞ்சு கணக்குகளில் பற்று வரவு நிர்வ .... | | 13,520 4 1 |
| பில்கள், சிட்டுகள் கொடுபட வேண்டியது .... | | 11,855 11 0 |
| லாப நஷ்டக் கணக்கு:- முன் பாக்கி ... | 3,607 12 8 | |
| இவ்வருஷத்திய நிகர லாபம் | 1,12,959 4 2 | |
| | 1,16,567 0 10 | |
| வரிகளுக்காகச் செலுத்தியது | 21,099 14 0 | |
| | 95,467 2 10 | |
| இடைக்கால டிவிடெண்டு பங் குகளுக்குக் கொடுத்தது .... | 11,250 0 0 | 84,217 2 10 |
| மொத்த ரூபாய். | | 59,91,428 6 6 |

### சொத்துக்கள்

| | |
|---|---|
| கைவசம் ரொக்கமாயும், பாங்குகளின் கரண்ட் கணக்குகளில் ரொக்கமாயும் ரூ. | 10,27,605 5 2 |
| தங்கம், வெள்ளி இருப்பு கொள்முதல் படி .... | 37,948 9 3 |
| சர்க்கார் செக்யூரடி முதலியவைகளின் பேரில் உள்ள தொகை .... | 17,43,001 7 9 |
| கடன்கள், முன்பணங்கள், பில்கள் வாங்கப் பட்ட வகையில் .... | 30,16,572 8 11 |
| வசூலாக வேண்டிய பில்கள் ... | 57,499 14 4 |
| பிக்ஸட் அஸ்ஸட்ஸ் .... | 23,018 1 7 |
| முதலீடுகளின் சேர்த்துள்ள வட்டி இனம் .... | 9,227 12 0 |
| பழைய பங்குதாரர்களுக்குப் போனஸ் பங்குகள் .... | 30,000 0 0 |
| திரும்பிப் பெறக்கூடிய சிட்டுத் தொகை .... | 10,290 0 0 |
| சில்லரை இனங்கள், வருமானவரி முன்பணம் சேர்த்து .... | 36,264 11 6 |
| மொத்த ரூபாய். | 59,91,428 6 6 |

**பிக்ஸட் டிபாசிட்டுகளின் பேரில் வட்டி விகிதம்**

6 மாதங்களுக்கு 3½% வருஷவட்டி, 12 மாதங்களுக்கு 4% வருஷவட்டி, 24 மாதங்களுக்கு வருஷவட்டி 4½%

**சீசன் டிபாசிட்டுகள்**

3 முதல் 5 மாதங்களுக்கு ரூ 2500ம் அதற்கு மேற்பட்ட தொகையையும் சீசன் டிபாசிட்டுகளாக 3½% வருஷ வட்டிக்கு ஏற்றுக்கொள்ளப்படும்
இந்த டிபாசிட்டுகள் 31—10—47 தேதிக்கு மேல் அமுலிலிருக்காது.

**சேவிங்க்ஸ் கணக்குகள்**

திறக்கப்பட்டு, வாரம் ரூ 500 வரை செக்குகள் மூலம் திருப்பிப் பெறுவதற்கு 3% வருஷ வட்டி அளிக்கப்படும்

**கரண்ட் கணக்குகள்**

திறக்கப்பட்டு, 1% வருஷ வட்டி கொடுக்கப்படும்.

திருச்சினுப்பள்ளி, 7—2—47

**ஜெ. ஹூம்சந்த் சேட்,**
மானேஜிங் டைரக்டர்.

